# திருப்புகழமிர்தம்

௯௰௧ ஆவணி



ஆசிரியர் :

## கிருபானந்தவாரி

திருப்புகழமிர்தம் காரியாலயம்
39, சிங்கண்ண செட்டித் தெரு, சென்னை-2.

உ

ஓம் குஹாய நம:



# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றாள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

| | | |
|---|---|---|
| மலர் 33 | கீலக ஹூ — ஆவணி மீ<br>ஆகஸ்டு 1968 | இதழ் 5 |

## திருப்புகழ்

நாடித் தேடித் — தொழுவார்பால்
　　நானத் தாகத் — திரிவேனோ
மாடக் கூடற் — பதிஞான
　　வாழ்வைச் சேரத் — தருவாயே

பாடற் காதற் — புரிவோனே
　　பாலைத் தேனொத் — தருள்வோனே
ஆடற் றோகைக் — கினியோனே
　　ஆனைக் காவிற் — பெருமாளே.

### பதவுரை

பாடல் காதல் புரிவோனே = பாடலில் அன்பு செய்பவரே! பாலை தேன் ஒத்து அருள்வோனே = பால் போன்றதும் தேன் போன்றதுமான இனிய அருளைப்புரிபவரே! ஆடல் தோகைக்கு இனியோனே = நடனமாடுகின்ற மயிலுக்கு இனியவரே! ஆனைக்காவில் = திருவானைக்காவில் எழுந்தருளியுள்ள, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! நாடி தேடி தொழுவார்பால் = தேவரீரை விரும்பித் தேடித் தொழுகின்ற அடியாரிடத்தே, நான் நத்து ஆக திரிவேனோ = அடியேன் விருப்பம் உள்ளவனாகத் திரிய மாட்டேனோ? மாட கூடல் பதி = மாடங்கள் நிறைந்த கூடல்பதியான துவாத

1350—1

*சாந்த நிலையில் விளைகின்ற ஞான வாழ்வை சேரத் தருவாயே—ஞான வாழ்வினை அடியேன் அடையும்படி தந்தருளுவீராக.*

## பொழிப்புரை

பாடலில் அன்பு செய்பவரே! பால் போலவும் தேன்போலவும் இனிய அருள் புரிபவரே! நடனம் புரிகின்ற மயிலுக்கு இனியவரே! திருவானைக்காவில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! தேவரீரை விரும்பித் தேடிவந்து தொழுகின்ற அடியவரிடத்தில் அடியேன் விருப்பங் கொண்டு அவர் பின் திரிய மாட்டேனே? மாடங்கள் நிறைந்த மதுராபுரியாகிய துவாதசாந்தப் பெருவெளியில் விளைகின்ற பெருவாழ்வாகிய பரஞான வாழ்வைச் சேர அடியேனுக்கு அருள்புரிவீராக.

## விரிவுரை

**நாடித்தேடி தொழுவார்பால் :—**

அடியார்கள் உலக நாட்டத்தைத் துறந்து இறைவனை நாடி, அப்பெருமானுடைய திருவருளைத் தேடித் தொழுவார்கள்.

**நானத்தாகத் திரிவேனே :—**

நான் நத்து ஆக. நத்துதல்—விரும்புதல்.

அடியவர்களை விரும்பி அவர்கள் பின் திரிதல் வேண்டும். அடியார்கள் திருக்கூட்டம் பரகதியைச் சேர்விக்கும். கண்ணில்லாத பசு மந்தையுடன் கூடினால் உராய்ந்து கொண்டே வந்து தொழுவத்தைச் சேரும். அதுபோல் ஞான விழியற்ற மாந்தர் அடியார் குழாத்துடன் சேர்ந்தால் எளிதாக முத்திநலம் பெறுவர்.

'கோவுடனே கூடிவரும் குருட்டாவும் ஊர்புகுமால்''
''சூரில் கிரியில் கதிர்வேலெறிந்தவன் தொண்டர் குழாம்
சாரில் கதியன்றி வேறில்லைகாண்'' —*கந்தரலங்காரம்.*

**மாடக் கூடற்பதி ஞானவாழ்வு :—**

கூடற்பதி—மதுரை.

இது துவாதசாந்தத் தலம். உச்சிக்குமேல் 12 அங்குலத்தில் உள்ளதாகக் கருதப்படும் யோகஸ்தானம். மேலைப் பெருவெளி. அங்கு விளையும் ஞான வாழ்வை வேண்டுகின்றார் அருணகிரியார்.

''...துவாதசாந்தப் பெருவெளியில்
துரியங்கடந்த பரநாத மூலத்தலம்''
—*மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் (முத்தப்பருவம்)*

''துவாத சாந்தத்தொரு பெருவெளிக்கே
விழித்துறங்குந் தொண்டர்''
—*மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் (அம்மானை.)*

பாடற்காதற் புரிவோனே :—

முருகப் பெருமான் தமிழ்ப் பாடலில் காதல் புரிபவர். செந்தமிழ்ப் புலவர்கள் அன்பினுல் பாடும் அரிய தமிழ்ப் பாடலுக்கு அருள் புரிபவர்.

நக்கிரர், அருணகிரியார், பொய்யாமொழி முதலிய அடியார்களின் பாடல் கேட்டு அருள் புரிந்த அருட்டிறத்தை அவர்களது வரலாறுகளால் அறிக.

பாலைத்தேனைத் தருள்வோனே :—

பால் போலவும், தேன் போலவும் இனிய திருவருளை அடியார்கட்குப் பாலிக்கும் பரம கருணாநிதி முருகன்.

ஆடற்றோகைக் கினியோனே :—

இயல்பாக நடனமாடும் தன்மையுடையது மயில். மயிலை ஊர்தியாகக் கொண்டு மகிழ்பவர்.

இது பிரணவம். ஓங்காரத்துள் ஒளிர்பவர். அந்த ஒரு மொழிக்கு இனியவர் முருகர்.

மயில் போன்ற வள்ளிபிராட்டிக்கு இனியவர் எனினும் அமையும். உவமையாகு பெயராகக் கொண்டால் வள்ளியெனப் பொருள்படும்.

## கருத்துரை

திருவானைக்காவுறை முருகா ! துவாத சாந்தத்தில் விளையும் ஞானவாழ்வைத் தந்தருள்.

## திருப்புகழ்

நிறைந்த துப்பிதழ் தேனூறல் நேரென
மறந்த ரித்தக ணாலால நேரென
நெடுஞ்சு ருட்குழல் ஜீமூத நேரென நெஞ்சின் மேலே

நெருங்கு பொற்றன மாமேரு நேரென
மருங்கு நிட்கள ஆகாச நேரென
நிதம்ப முக்கணர் பூணார நேரென நைந்து சீவன்

குறைந்தி தப்பட வாய்பாடி யாதர
வழிந்த ழைத்தணை மேல்வீழு மாலொடு
குமண்டை யிட்டுடை சோராவி டாயில மைந்து நாபி

குடைந்தி ளைப்புறு மாமாய வாழ்வருள்
மடந்தை யர்க்கொரு கோமாள மாகிய
குரங்கை யொத்துழல் வேனேம னேலைய
மென்று சேர்வேன்

மறந்த சுக்ரிப மாநீசன் வாசலி
லிருந்து லுத்தநி யோராத தேது சொல்
மனங்க ளித்திட லாமோ துரோகித முன்பு வாலி
வதஞ்செய் விக்ரம சீராம னுநில
மறிந்த திச்சர மோகோ கெடாதினி
வரும்ப டிக்குரை யாய்பார் பலாகவ மென்றுபேசி

அறந்த ழைத்தநு மானுேடு மாகடல்
வரம்ப டைத்ததின் மேலேறி ராவண
னரண்கு லைத்தெதிர் போராடு நாரணன் மைந்தனுன
அனங்கன் மைத்துன வேளேக லாபியின்
விளங்கு செய்ப்பதி வேலாயு தாவிய
னலங்க யப்பதி வாழ்வான தேவர்கள் தம்பிரானே.

## பதவுரை

மறந்த சுக்ரிப=சொன்ன சொல்லை மறந்துபோன சுக்ரீவனுகிய, மா நீசன் வாசலில் இருந்து=பெரிய நீசனுடைய வாசலில் நின்று; லுத்த=''ஏ உலோபியே, நீ ஓராதது ஏது சொல்=நீ நன்மையை ஆராய்ந்து பாராமல் இருக்கும் காரணம் யாது? சொல்லுக, மனம் களித்திடலாமோ=கள்ளுண்டு மனம் மகிழுதல் நியாயமா? துரோகிதம்=உன் செய்கை பாதகமாகும், முன்பு வாலி வதம் செய்=முன்னே வாலியைக் கொன்ற, சீராமன் நான்=ஸ்ரீராமன் நான்; நிலம் அறிந்தது=இது உலகெலாம் அறிந்ததாகும்; இ சரம்=என்னுடைய இந்த அம்பு உளது; ஓகோ கெடாது=ஓகோ கெட்டுப் போகவேண்டாம்; இனி வரும்படிக்கு உரையாய்=இனியாவது தாமதிக்காது வரும்படிப் போய்ச்சொல்; பலாகவம்பார்=பல போர்களின் விளைவைச் சென்று பார்ப்பாயாக'', என்று பேசி=என்றெல்லாம் இலக்குமணனிடம் சொல்லியனுப்பியும், அறம் தழைத்த அநுமானுேடு=தரும நெறியில் தவருது விளங்கும் அநுமனுடன் சென்று, மா கடல் வரம்பு அடைத்து=பெரிய கடலை அணைகட்டி அடைத்தும், அதன்மேல் ஏறி=அந்த அணைமீது போய், ராவணன் அரண் குலைத்து=இராவணனுடைய கோட்டைகளை அழித்து, எதிர்போர் ஆடு=எதிர்த்துப் போர் செய்த, நாரணன் மைந்தன் ஆன=நாராயண மூர்த்தியின் குமாரனுன, அநங்கன் மைத்துனவேளே=மன்மதனுக்கு மைத்துனனுக விளங்கும் உபகாரியே! கலாபியின் விளங்கு=மயில்மீது விளங்குகின்ற, செய் பதி வேலாயுதா=வயலூரில் வாழும் வேலாயுதக் கடவுளே! வியன் நலம்=சிறப்பும் நன்மையும் பொருந்திய, கய பதி வாழ்வு ஆன=திருவானைக்காவில் வாழ்வு கொண்ட

வரே! தேவர்கள் தம் பிரானே=தேவர்கட்குத் தலைவரே! நிறைந்த துப்பு இதழ்=முற்றிய பவளம் போன்ற இதழின், ஊறல் தேன் நேர் என=ஊறும் நீர் தேனுக்கு நிகர் என்று கூறியும், மரம் தரித்த கண்=கொலைத் தொழில் புரியும் கண்கள், ஆலாலம் நேர் என=ஆலகால நஞ்சினை ஒக்கும் என்று கூறியும், நெடும் சுருள் குழல்=நீண்டு சுருண்ட கூந்தல், ஜீமூதம் நேர் என=மேகத்தை ஒக்கும் என்று கூறியும், நெஞ்சின்மேலே=மார்பிலே விளங்கும், நெருங்கு பொன் தனம்=நெருங்கியுள்ள அழகிய கொங்கைகள், மாமேரு நேர் என=பெரிய மேரு மலைக்கு ஒப்பு என்று கூறியும், மருங்கு=இடையானது, நிஷ்கள ஆகாசம் நேர் என=உருவமில்லாத வெளிக்கு ஒப்பென்று கூறியும், நிதம்பம்=அல்குல், முக்கணர் பூண் ஆரம் நேர் என=மூன்று கண்களையுடைய சிவபெருமான் அணிந்துள்ள பாம்பின் படத்துக்கு நிகர் என்று கூறியும், நைந்து சீவன் குறைந்து=உள்ளம் சோர்வுற்று உயிர் மங்கலுற்று, இதம்பட=இன்பம் வழிய, வாய்பாடி=வாயால் பாடி, ஆதரவு அழிந்து அழைத்து=அன்பு இல்லாமலே அழைத்து, அணைமேல் வீழும்=படுக்கைமேல் விழும், மாலோடு=ஆசையுடன், குமண்டை இட்டு=மகிழ்ச்சியால் குதித்து, உடை சோரா=ஆடை நெகிழவும், விடாயில் அமைந்து=காமதாகத்தில் பொருந்தி, நாபி குடைந்து இளைப்பு உறும்=அம்மாதர்களின் தொப்புளில் மூழ்கி இளைப்படைந்து, மா மாய வாழ்வு அருள்=பெரிய மயக்க வாழ்வைத் தருகின்ற, மடந்தையர்க்கு=அவ்விலை மகளிரிடத்தில், கோமாளம் ஆகிய குரங்கை ஒத்து=ஒப்பற்ற மகிழ்ச்சியைக் கொள்ளுகின்ற குரங்கைப் போன்று, உழல்வேனோ=அடியேன் திரியலாமோ? மனோலயம் என்று சேர்வேன்=மன ஒடுக்கம் என்று பெறுவேன்?

## பொழிப்புரை

"கார்காலம் கழிந்தவுடன் வருகின்றேன்" என்று தான் சொல்லிய உறுதி மொழியை மறந்த பெரிய இழிந்தவனாகிய சுக்ரீவனுடைய வீட்டின் வாயிலில் சென்று நின்று, "ஏ உலோபியே! நீ இராமபிரானுடைய ஆற்றலையாராயாமல் இருப்பதற்குக் காரணம் யாது? சொல்லுக; கள்ளுண்டு மனம் மகிழுதல் நீதியா? உன் செய்கை பாவமாகும்; முன் வாலியைக் கொன்ற ஆற்றல் படைத்த ஸ்ரீராமன் நான்; எனது இந்த அம்பை உலகெலாம் அறியும்; ஒகோ! நீ கெட்டுப் போக வேண்டாம் இனியேனும் தாமதியாமல் வரும்படி நீ போய்ச் சொல். பல போரின் விளைவை நீ பார்ப்பாயாக" என்றெல்லாம் இலக்குமணரிடம் கூறி சுக்கிரீவனிடம் அனுப்பியும், தரும நெறி வழுவாத அனுமனிடம் சென்று பெரிய கடலை அணைகட்டி அதன் மீது சென்றும், இராவணனுடைய கோட்டைகளை அழித்தும், அவனுடன் எதிர்த்துப் போர் புரிந்த நாராயண மூர்த்தியின்

மகனான மன்மதனுடைய மைத்துனராம் செவ்வேளே! வயலூரில் மயில்மீது விளங்கும் வேலாயுதரே! சிறப்பும் நலமும் கொண்ட திருவானைக்காவில் வீற்றிருப்பவரே! தேவர்கட்குத் தனிப் பெருந் தலைவரே! விலைமகளிருடைய முற்றிய பவளம் போன்ற வாயிதழில் ஊறும் நீர் தேன் போன்றது என்றும், கொலைபுரிய வல்ல கண்கள் ஆலகாலவிடம் போன்றது என்றும், நீண்டு சுருண்ட கூந்தல் கரிய மேகத்திற்கு நிகர் என்றும், மார்பில் நெருங்கி விளங்கும் அழகிய தனங்கள் பெரிய மேருமலைக்குச் சமானம் என்றும், இடை உருவமில்லாத ஆகாயத்துக்கு நிகர் என்றும், அல்குல் முக்கட் பரமராம் சிவபிரான் அணிந்துள்ள நாகத்தின் படம் போன்றது என்றும் புகழ்ந்து கூறி, உள்ளம் நொந்து, உயிர் மங்கி, இன்பம் அழிய வாயால் பாடி—அன்பு இல்லாமல் என்னை அழைத்து படுக்கை மேல் விழுந்து, ஆசையுடன் களித்துக் குதித்து ஆடை நெகிழக் காமவிடாயில் பொருந்தி, அம்மகளிரது தொப்புளில் முழுகித் திளைத்துக் களைப்பைத் தரும் மாய வாழ்வைக் கொடுக்கின்ற அம்மாதர்களிடம் ஒப்பற்ற மகிழ்ச்சியை யடைகின்ற குரங்குபோல் அடியேன் திரியலாமோ? மன ஒடுக்கம் என்று பெறுவேன்?

## விரிவுரை

**நிறைந்த துப்பிதழ் தேனூறல் நேரென :—**

துப்பு—பவளம். நிறைந்த துப்பு—முற்றிய பவளம்.

விலைமாதர்களின் பவளம் போன்ற வாயிதழ்களில் ஊறும் எச்சில் நீர் கொம்புத் தேனுக்கு நிகர் என்று அதனைப் பருகி உருகுவர்.

> "குமுத அமுத இதழ் பருகியுருகிமயல்
> கொண்டுற்றிடு நாயேன்" —(கொலைமத) திருப்புகழ்.

**பிறந்தரித்த கணாலால நேரென :—**

மறம்—கொலைத் தொழில். வீரம் எனினும் அமையும்.

மாதர்கள் கண் ஆடவரை மயக்குவதில் வீரம் பொருந்தியது. தம்மைக் கண்டாரைக் கொல்லுந் திறனுடையது.

நஞ்சு உண்டாரை மட்டும் கொல்லும். மாதர்கள் கண் கண்டாரையும் கொல்லும் திறனுடையது.

**நெடுஞ் சுருட்குழல் ஜீமூத நேரென :—**

ஜீமூதம்—நீருண்ட மேகம்.

மாதர்களின் கூந்தல் நீண்டும் சுருண்டும் கரிய மேகம்போல் காட்சி தரும்.

> "நெய்த்த சுரிகுழல் அறலோ முகிலோ" —திருப்புகழ்.

> "வந்தறத் திரண்டு மொய்த்தெழும் ஊழி
> மாலையில் கருத்தெழுங் குழலாள்" —பாரதம்.

நெஞ்சின்மேலே நெருங்கு பொற்றன மாமேரு நேரென :—

நெஞ்சு—மார்பு.

''தலையினும் மிடற்றிலும் நெஞ்சினும் நிலைஇ''
—தொல்காப்பியம்.

மார்பில் ஈர்க்கிடை போகமாட்டாமல் நெருங்கியுள்ள தனங்கள் பெரிய பொன் மேருமலைக்கு நிகர் என்று கூறுவர்.

மருங்கு நிட்கள ஆகாசநேரென :—

மருங்கு—இடை. நிட்களம்—அருவம்.

மாதர்களின் இடையானது ஆகாயம் போல் தோன்ருமல் மறைந்துளது என்று கூறுவர்.

''தெரியாதனவும் வரிவளையார் தங்கள் மருங்கே''
—நளவெண்பா.

குமண்டையிட்டு :—

குமண்டையிடுதல்—மகிழ்ச்சியால் குதித்தல்.

''கூடுமுயிருங் குமண்டையிடக் குனிந்து''
—திருவாசகம் (குலாப்பத்து.)

கோமாளமாகிய குரங்கை யொத்துழல்வேனே :—

குரங்கு எப்போதும் சேட்டை செய்யும் இயல்புடையது. அதற்கு மகிழ்ச்சி யேற்பட்டால் பெரிதும் சேட்டை செய்யும்.

காமக் கள்ளுண்டு மயங்கிய அடியேன் குரங்குபோல் பலப் பல சேட்டைகள் செய்து திரிந்து அழியலாமோ? அழிதல் கூடாது.

மனோலயம்,—

ஜெபத்தின் முதிர்ச்சியால் தியானமும், தியானத்தின் முதிர்ச்சியால் சமாதியும் விளையும், சமாதியில் மனம் ஒடுங்கி நிற்கும்.

இது நிகரில்லாத இன்பத்தை நல்கும். இது இத்தன்மைத் தென்று கூற முடியாதது. சொல்லுதற்கரிய பேரின்ப மயமானது.

''பகரொணாது சேரவொணாது நினையொணாதது வானதயாபர
பதியதான சமாதி மனோலயம் வந்துதாராய்''
—(தறையின்) திருப்புகழ்.

போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பு முள்ளும்
வாக்கும் வடிவு முடிவும் இல்லாதொன்று வந்துவந்து
தாக்கும் மனோலயந் தானேதரும் எனைத்தன் வசத்தே
ஆக்கும் அறுமுகவா சொல்லொணாதிந்த ஆனந்தமே.

—கந்தரலங்காரம் 73

மறந்த சுக்ரிப மாபீசன்.........வரும்படிக்குரையாய் பார்பலாகவமென்று பேசி :—

இத்திருப்புகழின் 5, 6—ஆவது அடிகளில் இராமர் இலக்குமணரிடம் சுக்ரீவனுக்குச் சொல்லியனுப்பிய உரையாடல் மிக அழகாக வர்ணிக்கப்பெறுகின்றது.

ஆவணி, புரட்டாசி, கார்காலம்.

சீதையை இராவணன் கவர்ந்தது பங்குனி மாதம்.

இராமர் சுக்ரீவனைச் சந்தித்தது ஆவணி மாதம்.

அநுமான் சீதையைக் கண்டது மார்கழி மாதம்.

இராமர் சீதையைச் சிறைமீட்டுத் திரும்பியது மாசி சுக்ல பட்சத்துச் சதுர்த்தசி நாள்.

எனவே சீதையைப் பிரிந்தபின் ஆவணியில் சுக்ரீவனைச் சந்தித்து வாலி வதம் புரிந்தார் இராமர்.

கார்காலம் மழைக்காலம். ஆதலால் சுக்ரீவனைப் பார்த்து இராமர், "நீ உன் ஆட்சியை இனிது செய். கார்காலம் கழிந்த பின் சீதையைத் தேடுவோம். சென்று வா" என்று கட்டளையிட்டருளினார்.

குறித்த காலம் கடந்தும் சுக்ரீவன் வந்தானில்லை. அதனால் இராமர் சிறிது சீற்றம் அடைந்து கிட்கிந்தைக்குச் சென்று அவன் மனநிலையை அறிந்து வருமாறு இலக்குவனை அனுப்பினார்.

அன்ன காலம் அகலும் அளவினில்
முன்ன வீரன் இளவலை மொய்ம்பினோய்
சொன்ன எல்லையி னுங்குமத் தூங்கிய
மன்னன் வந்திலன் என்செய்த வாறரோ.

பெறல ருந்திருப் பெற்றுத விப்பெருந்
திறம் நினைந்திலன் சீர்மையில் தீர்ந்தனன்
அறம் மறந்தனன்! அன்புகிடக்க நம்
மறன றிந்திலன் வாழ்வின் மயங்கினான்

''நன்றி கொன்றரு நட்பினை நாரறுத்
தொன்று மெய்ம்மை சிதைத்துரை பொய்த்துளார்
கொன்று நீக்குதல் குற்றத்தி னீங்குமால்
சென்று மற்றவன் சிந்தையைத் தேர்குவாய்.

நஞ்சமன்னவ ரைநலிந்தாலது
வஞ்சமன்று மநுவழக் காதலால்
அஞ்சிலம்பதி லொன்றறி யாதவன்
நெஞ்சில் நின்று நிலாவ நிறுத்துவாய்.

வெம்பு கண்டகர் விண்புக வேரறுத்து
இம்பர் நல்லறஞ் செய்ய எடுத்தவிற்
கொம்பு முண்டருங் கூற்றமு முண்டுங்கள்
அம்பு முண்டென்று சொல்லுநம் ஆணையே.

—கம்பராமாயணம்.

அறந்தழைத்தநு மானேடு :—

இராமாயண வரலாற்றில் வரும் பாத்திரங்கள் பல. அப் பாத்திரங்களுள் அநுமார் சிறந்த பாத்திரம்.

இவர் தருமத்தின் தனித் துணையாக நின்றவர்.

''தன்னுருக் கொண்டு நின்றான்
தருமத்தின் தனிமை தீர்ப்பான்''

அநங்கன் மைத்துன வேளே :—

அங்கம் இல்லாதவன் அநங்கன்.

மன்மதன் திருமால் புதல்வன். முருகனுடைய மைத்துனன்

இவன் கருவேள், முருகன் செவ்வேள்.

செய்ப்பதி :—

செய்—வயல். செய்ப்பதி—வயலூர்.

திருச்சிக்கு அருகில் உள்ள மிகச் சிறந்த முருகன் திருப்பதி. அருணகிரியாருக்கு அருள் புரிந்த புனிதத்தலம்.

கயப்பதி :—

கயம்—யானை. யானை வழிபட்ட திருவானைக்கா.

## கருத்துரை

திருவானைக்காவில் உறையுந் திருமுருகா ! மனேலயந் தந்து அடியேனை ஆட்கொள்வாய்.

உ

முருகா

# கற்பு

---

## விசாலாட்சி

"அம்மா! விசாலம்! இங்கே பார். மணி 7 ஆயிற்று. எழுந்திரு. பொழுது விடிந்த பின்னரும் தூங்கலாமா? எழுந்து நீராடி நீறுடி உன் பாட புத்தகங்களைப் படி."

விசாலாட்சி உடம்பை முறித்துக்கொண்டு கொட்டாவி விட்டுக் கொண்டு சுளித்த முகத்துடன் எழுந்தாள். தன் தந்தையார்மீது சிறிது கோபத்துடன் ஒரு சுளிப்புப் பார்வை பார்த்துவிட்டுக் குளிக்கும் அறைக்குப் போய் பல் விளக்கிக்கொண்டு வந்தாள்.

"என்ன அப்பா! இன்று ஞாயிற்றுக்கிழமைதானே. சிறிது நேரம் அயர்ந்து தூங்கினால் என்ன அப்பா குறைந்துவிட்டது?" என்று கொஞ்சுதலுடனும், அதட்டல் குரலுடனும் கூறினாள்.

"குழந்தாய்! காலையில் உறங்கினால் மூதேவி யடையும். நீ எனக்கு ஒரே பெண். என் மாதவத்தால் பிறந்த மணிவிளக்கு. சீதேவியைப் போல் வளரும் நீ காலையில் மூதேவியுடன் உறவு செய்யலாமா? கண்ணே! படிக்கவேண்டிய நேரத்தில் படிக்க வேண்டும். தூங்க வேண்டிய நேரத்தில் தூங்கவேண்டும். காலமல்லாத காலத்தில் தூங்குவது நன்றன்று"

"அப்பா! நான் படிப்பது அவசியந்தான். ஆனால் நான் படித்து என்ன உத்தியோகமா செய்யப் போகின்றேன். எனக்கு வாய்த்த தந்தையாகிய தாங்கள் பல லட்சங்கட்கு அதிபதி. ஏராளமான நில புலங்களையுடையவர். நான் ஏன் அதிகம் படிக்க வேண்டும்?

"என் கண்ணே! படிப்பது உத்யோகம் பார்ப்பதற்கன்று. கல்வி யினால் அறிவு வளர்ச்சி யடையும், அறிவினால் துன்பத்தை வென்று இன்பம் அடையலாம்."

"எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்"

என்கின்றார் திருவள்ளுவர்.

மணலை எடுக்க எடுக்க நீர் ஊறுவதுபோல் நல்ல நூல்களைக் கற்குந்தோறும் அறிவு ஊற்றெடுத்துச் சுரக்கும். சீரிய கூரிய அறி வினால் இடர் களைந்து இனிது வாழ்வர். என் வாழ்க்கையில் நடந்த, அதிர்ச்சியைத் தரும் ஒரு நிகழ்ச்சியைக் கூறுகின்றேன் கேள்."

"அம்மா! நமது ஊராகிய தென்காசி வளமையானது. நான் இளமையில் திருக்குற்றாலநாதரை வழிபட்டு வந்தேன். குற்றால நாதரின் திருக்கருணையால் எனக்குச் சீரும் சிறப்பும் செல்வமும் நில புலங்களும் நிரம்பப் பெருகுகின்றன.

இந்த நிகழ்ச்சி நடக்கும்போது உன் தாய் உன்னைக் கருவில் சுமந் திருந்தாள். நான் வியாபார சம்பந்தமாக ஐம்பதினாயிரம் ரூபாயை எடுத்துக் கொண்டு பம்பாய்க்குப் புறப்பட்டேன். அப்போது என்னிடம் கணக்கு வேலை பார்த்தவன் மூலம் உளவறிந்த மூன்று கள்வர்கள் என்னுடன் தொடர்ந்து ரயில் ஏறினார்கள்.

அந்த மூவரில் ஒருவன் மிகவும் சமர்த்தன் மற்ற இருவருடன் கலந்து, வீணாக மூவரும் செலவழித்துப் போவது உசிதமன்று; நான் ஒருவனே சென்று பணத்தைக் கவர்வேன். நீங்கள் இந்த மட்டோடு திரும்பிவிடுங்கள். இந்தா ஆளுக்கு நூறு ரூபாய்" என்று கொடுத்து அவர்களை விருதுநகருடன் திருப்பிவிட்டான்.

அந்த முதன்மையான கள்வன் என்னுடன் தொடர்ந்து பிர யாணம் புரிந்தான். திரண்ட தோளும் உருண்ட உடம்பும் சுருண்ட தலைமயிரும், பட்டுச் சட்டையும் விசிறி மடிப்பும், அழகிய தோல் பெட்டியும், சிறந்த படுக்கையும் உடையவனாகக் காட்சியளித்தான். நான் ஆண்டவன் தந்த கூரிய அறிவினால் அவனைக் கள்வன் என்று உணர்ந்து கொண்டேன்.

அவன் என்னுடன் அன்பாகப் பழகினான்.
"ஐயா! எங்கே போகின்றீர்?" என்றான்.
"பம்பாய்க்குப் போகின்றேன்" என்றேன்.

"ஓ! நல்லது. நானும் பம்பாய்க்குத்தான் போகின்றேன். நல்ல துணை. தங்களைப்போன்ற நல்லவர்கள் உறவு கோடி பொன் பெறும். நான் திருவனந்தபுரம். சிறப்பான வியாபாரம் புரிகின்றேன். தங்கள் அன்புக்கு நன்றி" என்றான். மதுரையில் எனக்குப் பட்சணம், காப்பி முதலியன வாங்கிக் கொடுத்தான்.

முதல் வகுப்பு வண்டியில் இருவரும் படுத்தோம். நான் குற்றால நாதரை மனதால் தியானஞ் செய்துவிட்டு உறங்கிவிட்டேன்.

நடு இரவில் அக்கள்வன் மயக்கப் பொடி தூவிய கைக்குட்டையை என் முகத்தில் இட்டான். நான் அதனால் மயக்கமடைந்துவிட்டேன். அவன் பணத்தைக் கவர நினைத்து என்னிடம் உள்ள எல்லாச் சாமான்களையும் சோதித்தான். பணம் கிடைக்கவில்லை. மிரள மிரள விழித்தான். "பணத்தை எங்கே வைத்தான்" என்று மிகவும் சிந்தித்தான்.

சென்னைக்கு அருகே வண்டி நெருங்கிக் கொண்டிருந்தது. நான் மெல்ல எழுந்து கைகால்களைச் சுத்தஞ் செய்தபின், பணமுடியை எடுத்து நூறு ரூபாய் நோட்டுக்களை வேண்டும் என்றே எண்ணிக் கொண்டிருந்தேன்.

அவன் இதனைப் பார்த்து வியப்புற்முன். நாம் நன்கு சோதித்தோமே. இதனை எங்கு ஒளித்து வைத்திருந்தானோ? என்று எண்ணினன். அவன் முகத்தில் அசடு வழிந்தது.

சென்னை சேர்ந்தபின் இருவரும் ஒரே ஓட்டலில் ஒரே அறையில் தங்கினோம். நான் அவனைச் சந்தேகித்திருப்பதை வெளியிலே காட்டாமல் மிக்க அன்புடன் அவனை உபசரித்து நடித்தேன்.

அன்றிரவும் அவன் மயக்கத்தைத் தரும் கைத்துண்டால் என் முகத்தை மூடினன். நான் சவம்போல் மூர்ச்சித்துவிட்டேன். அவன் என் மூட்டை முடிச்சுகள் முழுவதையும் நன்கு அலசிப் பார்த்தான். என் உடைகளையும் அவிழ்த்துப் பார்த்தான். பணத்தைப் பார்த்தாவில்லை. ஏமாந்தான். பொழுது விடிந்தது. நான் எழுந்து, தூங்கும் அவனை எழுப்பினேன்.

'என்ன இத்தனை தூக்கம்? காப்பி குடியுங்கள்'' என்று நான் முதல் தரமான காப்பி வாங்கித் தந்தேன். அவன் எழுந்து காப்பி குடித்துக் கொண்டிருந்தான்.

நான் அவன் எதிரில் உட்கார்ந்து என் பணத்தை ஒருமுறை எண்ணிப் பார்க்கலானேன். அவன் இதைப் பார்த்து மேலும் ஆச்சர்யப்பட்டான். ஆனல் அதனை அவன் மறைத்துக்கொண்டான்.

மறுநாள் காலை நானும் அவனும் பம்பாய்க்கு ஒரே வண்டியில் ஏறினோம். அவன் மனதில் ஏதேதோ சிந்தனைப்புயல் வீசியது.எரிமலை வெடித்தது.

நடு இரவு. நான் கவலையற்றுத் தூங்கிவிட்டேன். அவன் அன்றும் மயக்கப் பொடியால் நனைத்த துண்டை என் முகத்தில் இட்டு, என்னை மயக்கத்தில் ஆழ்த்தினன். மூன்ரும் முறையாக முன்னையிலும் பன்மடங்கு அணுஅணுவாக ஆராய்ந்து பணத்தைத் தேடினன். பணம் கிடைக்கவில்லை. வாட்டமுற்முன். எப்படி மறைத்து வைத்திருக்கின்றேன் என்று நாட்டமுற்முன். முடிவில் அவனுக்கு ஒரே ஏமாற்றந்தான்.

பொழுது புலர்ந்தது. எங்கள் வண்டி புனவை யணுகிற்று. நான் எழுந்து வழக்கம்போல் காப்பியும் பலகாரமும் வாங்கி அவனுக்குத் தந்து நானும் சாப்பிட்டேன். அவன் காணும்படியாக என் நோட்டுகளை எடுத்து ஒருமுறை எண்ணினேன். அவனும் இதனைப் பார்த்தான்.

அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. மூன்று முறை மூன்று நாள்களாகத் தேடினேமே? உடை முதலிய அனைத்திலும்தான் ஆராய்ந்தோமே? இதனை எங்கே எப்படி மறைத்து வைத்திருந்தான்? என்னையே இவன் ஏமாற்றினனே? ஆ! ஆ! என்னால் இதனை அறிய முடியவில்லையே? இதுவரை இப்படிப்பட்ட ஒரு சமர்த்தனை நான் பார்க்கவில்லையே? இவன் பெரிய எம்டன். இதனை எப்படி அறிவது? என்று பலவாறு அவனுக்குள் சிந்தனைச் சூறாவளி வீசத்தொடங்கியது.

கல்யாணி வந்தவுடன் "ஐயா! வணக்கம். தாங்கள் எங்கே தங்குகின்றீர்?" என்றான்.

நான் அன்புடன் அவனைப் பார்த்து நான் தமிழ்ச்சங்கத்தில் தங்குவேன். தாங்கள் சந்தர்ப்பம் கிடைத்தால் என்னைச் சந்திக்கலாம். போன் பண்ணிவிட்டு வாருங்கள்" என்றேன்.

நான் தாதரில் இறங்கித் தமிழ்ச்சங்கத்தில் தங்கி என் அலுவல்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

அக்கள்வன் ஒருநாள் மாலை வந்தான், தனியறையில் இருந்து நான் எழுதிக் கொண்டிருந்தேன்.

என்னை வணங்கி எதிரில் இருந்த நாற்காலியில் அமர்ந்தான்.

"ஐயா!" என்று ஈனக்குரலால் என்னை அழைத்தான். நான் "ஏன்" என்றேன்.

'நான் தங்களிடம் மூன்று முறை தோற்றுப்போனேன். நான் வியாபாரியன்று கள்வன். பல காலமாகக் கள்ளத்தனம் புரிந்திருக்கின்றேன். திருடுவதில் நல்ல திறமையுள்ளவன் திருட்டுத் தொழிலில் சித்திபெற்றவன், பலப்பலதந்திரச் சூழ்ச்சிகளில்நான் வல்லவன். ஐயா! ஆனல் என் தந்திரம் தங்களிடம் பலிக்கவில்லை.

ஒவ்வொரு முறையும் என் கைத்துண்டில் மயக்கப்பொடி தூவி உம்மை மயக்கினேன். உங்கள் மூட்டை மூடிச்சு பெட்டி படுக்கை சட்டை சட்டைப்பை இடுப்பு அத்தனையும் அணுவணுவாக ஆய்ந்து சோதித்தேன். பணம் கிடைக்கவில்லை.

நாங்கள் மூவர் தொடர்ந்தோம். இருவரையும் ஆளுக்கு நூறு கொடுத்து விருதுநகருடன் திருப்பிவிட்டேன்.

ஆனல் ஒவ்வொரு நாளும் காலையில் என் கண்முன் நோட்டுக் கட்டுக்களை எண்ணுகின்றீர்; இது என்ன மந்திரமா? மாயமா? தந்திரமா? நான் இதை அறிய வேண்டும் என்று புழுவாய்த் துடிக்கின்றேன். கடவுள் சாட்சியாக இனி எனக்குப் பணம் வேண்டாம். பணத்தை நீர் மறைத்த விதம் தெரிய வேண்டும். தயவு செய்து சொல்லுங்கள்" என்று என்னை வேண்டிக் கேட்டான்.

நான் அவனைப்பார்த்துக் கூறலானேன். "அன்பரே! நான் கூறுவதைக் கவனமாகக் கேளும். ஒரு மனிதனுக்கு சுகதுக்கங்கள் மாறி மாறி வருகின்றன. நாம் முன் செய்த நல்வினை தீவினைகளால் இவைகள் நம்மை வந்து அடைகின்றன. களவு கனவிலும் கூடாது. களவு செய்கின்றவர்கள் என்றிருந்தாலும் ஒருநாள் பிடிபடுவார்கள். அரசினரால் தண்டிக்கப்படுவார்கள். நம் பக்கத்தில் பிரபலமாகக் களவு செய்து கொண்டிருந்த ஜம்புலிங்கம் பிடிபட்டு மாண்ட கதை உமக்குத் தெரிந்திருக்குமே?

ஒருவேளை அரசாங்கத்தையும் ஏமாற்றலாம். எங்கும் நிறைந்த-எல்லாம் அறிந்த சர்வபூத சாட்சியாகிய ஆண்டவனை ஏமாற்ற முடியுமா? திருடுவதனால் இம்மையில் பழியும் மறுமையில் பாவமும் விளைகின்றன. நம் கண்முன் கண்ணற்றவர்களும், அங்கப்பழுதானவர்களும் இருக்கப் பார்க்கின்றோமே? அவர்கள் முற்பிறப்பில் களவு முதலிய பாவங்களைச் செய்தவர்கள். திருடி வந்த பணம் பலவகையில் செலவழிந்துவிடும். பாவம் நம்முடன் மறுபிறப்பில் வந்து வேதனைப்படுத்தும். இன்றிருந்தார் நாளை இருக்கமாட்டார். நேற்றிருந்தார் இன்றில்லை. உலக வாழ்வு நீர்மேற் குமிழிக்கு நிகர். மன்னாதிமன்னர்களெல்லாம் அழிந்தார்கள். சேரசோழ பாண்டியர்கள் இல்லை. ஆனால் அவர்கள் செய்த நல்லறங்களின் சின்னங்களாக நமது தென்னகத்துக் கோபுரங்களும் கோயில்களும் காட்சி தந்து மாட்சி தருகின்றன. நன்கு ஊன்றிச் சிந்தித்துப் பாருங்கள்.

இறைவன் எல்லோரையும் ஒவ்வொரு கணமும் பார்த்துக் கொண்டே யிருக்கின்றான். மனிதர்களை வஞ்சிக்கலாம்; ஏமாற்றலாம்-ஆண்டவனை ஏமாற்ற முடியுமா? நாம் எல்லோரும் இறைவனுடைய சந்நிதியில் இருக்கின்றோம். ஆதலால் களவு பொய் காமம் கோபம் முதலிய குற்றங்கள் செய்வது கூடாது.

'களவு பொய் காமம் கோபம் முதலிய குற்றங்காய்ந்தார்"

என்று அப்பூதியடிகள் புராணத்தில் சேக்கிழார் பெருமான் கூறுகின்றார்.

நமது நாட்டிலே எத்தனையோ தாசில்தார்கள் இருந்தார்கள். இப்போதும் இருக்கின்றார்கள். யார் பேராவது தெரிகின்றதா? பத்ராசலத்திலே ஸ்ரீராமர் திருக்கோயில் திருப்பணி செய்த இராமதாசராகிய தாசில்தார் பேர்தான் குன்றாது நின்று புகழ் மணம் வீசிக்கொண்டிருக்கின்றது. நன்கு சிந்தித்துப் பாரும்.

ராஜராஜன் இன்று இல்லை. அவன் எழுப்பிய தஞ்சைப் பெரிய கோயில் வானளாவ நின்று தமிழகத்தின் பெருமையை ஆங்கிலேயருக்கும் எடுத்துக் காட்டி முரசறைந்து கொண்டிருக்கின்றது. உல

கிலே நல்லமைதான் நிலைத்து நிற்கும். தீமை நிலைக்காது ஆதலால் இந்தக் கணம்முதல் நீர் திருந்தும். செய்த பாவத்துக்காக வருந்தும். அறவழியில் பொருந்தும். அதுதான் உய்யும் நெறி.

இனி நான் களவு செய்வதில்லை. செய்த பாவத்துக்கும் கழுவாய் செய்வேன் என்று சத்தியம் செய்து கொள்ளும். அப்படிச் செய்வீராயின் நான் எப்படிப் பணத்தை மறைத்து வைத்தேன் என்ற சூட்சுமத்தைச் சொல்லுவேன்'' என்று நீண்டதொரு அறிவுரையாக விரிவுரை பகர்ந்தேன்.

கள்வனுடைய கண்களில் முத்து முத்தாக நீர் பெருகியது. அவன் உள்ளம் உருகியது. எழுந்தான், என் கால் மீது விழுந்தான்.

''என் மனமாசினையகற்ற வந்த அருட்பெருந் தெய்வமே, இனி நான் உயிருள்ளவரை திருடமாட்டேன். இந்த விநாடியுடன் கனவிலும் களவு புரிவதில்லையென்று விண்ணும் மண்ணும் அறியச் சத்தியம் புரிகின்றேன். இது உறுதி'' என்றான்.

நான் அவனை மார்புடன் தழுவிக்கொண்டேன். ''ஐயா! நான் கடவுள் தந்த கூர்த்த மதியால் உன்னைப் பார்த்த மாத்திரத்தில் நீ கள்வன் என்பதை உணர்ந்தேன். ஒவ்வொரு நாளும் உறங்கு முன் உனக்குத் தெரியாமல் நான் உன் படுக்கையில் உன் தலையணையின் கீழ் என் பணத்தை வைத்துவிடுவேன். நீ என்னைத் தேடினாய். நீ விழிப்பதற்குமுன் நான் விழித்து உன் தலையணையின் கீழ் வைத்த பணத்தை எடுத்து எண்ணுவேன்.

பரகதிக்குப் போகின்ற ஒருவனிடமுள்ள ஞானப் பொக்கிஷத்தைக் கவர சத்துவம் ராஜஸம் தாமதம் என்ற முக்குணங்களும் தொடரும். நீ சத்துவகுணம். மற்ற ராஜஸ தாமத குணங்களை நீ விருதையில் நிறுத்திவிட்டனை. சத்துவ குணமாகிய நீ என்னுடன் வந்தாய். என் ஞானப் பொக்கிஷத்தைச் சத்துவ குணத்திடம் ஒப்புவித்தேன்.

''மந்திரம் கால் மதி முக்கால்'' என்பது பழமொழி. என் பண முடிச்சு உன்னிடமே இருந்தது. யாருமே பிறரைச் சோதிப்பார்களே யன்றி தன்னைத்தான் சோதிக்கமாட்டார்கள். தன்னைச் சோதிக்கின்றவன்தான் அறிஞன்.

ஆதலால் நான் என் பணத்தை உன்னிடமே வைத்தேன். நீ என்னை ஏமாற்ற முயன்றாய்: நீ தான் ஏமாந்தாய். இனி பிறரை ஏமாற்றாதே'' என்று நான் கூறினேன்.

# சிரிக்கின்றார்கள்

ஒருவனைக் கண்டு ஒருவன் சிரிக்கின்றான் என்றால் அதற்குத் தகுந்த காரணம் இருக்கவேண்டும்.

நம்மைக் கண்டு பெரியவர்கள் சிரிக்கின்றார்கள்.

ஒரு சிறு குழந்தை மலசலத்தைக் கழித்து அவற்றை உடம்பில் பூசிக்கொண்டு விளையாடுமானால் அக்குழந்தையைக் கண்டு சிரிப்போமல்லவா? சிரிக்கவும் செய்வோம்; வெறுக்கவும் செய்வோம்.

ஒரு சிறுவன், அசுத்தமான நீர் தேங்கியிருக்கும் நாற்றச் சேற்றில் விளையாட்டுக்குரிய குண்டு விழுந்து விட்டதை எடுத்து துடைத்துக்கொண்டு குண்டு விளையாடுவனாயின், அந்த அசுத்தத்தை யுணராது அவன் அறியாமையைக் கண்டு நாம் சிரிப்போம்.

நாம் நாளும் நாளும் உடம்பை வளர்க்கின்றோம்; செல்வத்தை வளர்க்கின்றோம்; உத்யோகத்தை வளர்க்கின்றோம். வீடு நிலபுலங்களைப் பெருக்கிக் கொள்ளுகின்றோம். ஆனால் நமது குணங்களை வளர்க்கின்றோமா? அதுதான் இல்லை.

இராமாயணத்தில் வரும் பரதரைப்பற்றி இங்கு நினைவு கூர்வோம். இராமாயணமாகிய காவியத்துக்கு நாயகர் ஸ்ரீராமர். கதாநாயகனுக்கு மேற்பட்ட ஒரு பாத்திரம் அந்தக் கதையில் இருக்கக் கூடாது. ஆனால் இந்த விதிக்கு விலக்காக, பரதர் இராமரினும் மேற்பட்டு விளங்கினார்.

---

அவன் அந்த விநாடியே திருந்தி நல்வழிப்பட்டான். என் அருந்தவச் செல்வமே? ஆதலால் இது வாழ்வில் நடந்த ஒரே அரிய நிகழ்ச்சி: கல்வியறிவினாலும் கடவுளருளாலும் நல்லறிவும் சமயோசித புத்தியும் உண்டாகும். ஆனபடியால் அறிவு அவசியமானது. கற்பதனால் அறியாமை நீங்கி அறிவு ஓங்கும். எனவே நீ சோம்பலைத் துறந்து, விளையாட்டுக்களை மறந்து அறிவு நூல்களைக் கற்று, அதனால் இனிய அறிவு நலத்தைப் பெற்று வாழ்வாயாக" என்று தந்தையார் எடுத்துக் கூறினார். இந்த அற்புதமான—அறிவாற்றல் நிறைந்த உரைகளைக் கேட்ட விசாலத்தின் அறிவு விசாலப்பட்டது.

பிதாவை வணங்கினாள். அன்று தொட்டு அதிகாலையில் எழுந்து படித்து முன்னேற்ற மடைந்தாள்.

அயோத்தியிலே கோசலையின் திருவுதரத்திலே இராமர் சித்திரை மாதம் நவமி திதி, புனர்ப்பூச நட்சத்திரத்தில் கார்மேக வண்ணராக அவரித்தார்.

ஒருபகல் நிலமெலாம் உதரத்துள் பொதிந்து
அருமறைக் குணர்வறும் அவனை அஞ்சனக்
கருமுகில் கொழுந் தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை

அதற்கு அடுத்த நாள் தசமி திதியில் பூச நட்சத்திரத்தில் மரகத வண்ணராகப் பரதர் அவதரித்தார்.

பரதர் பிறக்கும்போது, இராமருக்கு நூறு குணம் என்றால் பரதருக்கும் நூறு குணம் இருந்தது. இராமருக்கு 100 பரதருக்கு 99 என்று இல்லை. சமமான குணத்துடன்தான் பரதர் தோன்றினர். இதனை யார் பார்த்தது? அப்போது நேரே பார்த்த விசுவாமித்திரர் ஜனக மன்னனிடம் கூறுகின்றார்.

தள்ளரிய பெருநீதி தனியாறு புகமண்டும்
பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் பெயரானை
எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் இவ்விருந்த
வள்ளலையே யனையானைக் கேகயர்கோன் மகள்பயந்தாள்.

இராகவனுடைய குணத்துக்குச் சமானமுள்ள பரதனைக் கைகேயி பெற்றாள்.

உயர்ந்த நீதியென்ற பெரிய நதி தங்குகின்ற பள்ளமாம். பரதர் மிகப் பெரிய குணக்கடல்; அறத்தின் உருவம் அவர். அன்பின் சிகரம், தியாகத்தின் கருவூலம்.

ஒரு மனிதனுக்குக் கல்யாணத்துக்கு முன் இருந்த குணங்கள், கல்யாணத்துக்குப்பின் காணப்பட மாட்டா. இதுதான்உலகியற்கை.

பரதருக்குத் திருமணம் ஆனபின் மூன்று மடங்கு குணங்கள் வளர்ந்தன. இதனை யார் கண்டது? இராமனுடைய தாய் கௌசலை கூறுகின்றாள்.

தாயாரிடம் வந்த இராமர் "அம்மா! இந்த அரசு என் தம்பி பரதனுக்கு" என்றார்.

அப்போது கௌசலை கூறுகின்றாள்.

"மகனே! இந்த மநுகுலத்து வழக்கம் அரசு மூத்தவனுக்குத் தான் உரியது. ஆனால் பரதன் உன்னைவிட மூன்று மடங்கு நல்லவன்" என்றாள்.

''முறைமையன் றென்ப தொன்றுண்டு மும்மையின்
நிறைகுணத்தவன் நின்னிலும் நல்லனுல்''

| | |
|---|---|
| இப்போது இராமருக்கு | 100 குணம் |
| பரதருக்கு | 300 குணம் |

இப்படி மூன்று மடங்கு பரதருடைய குணம் வளர்ந்தது.

இந்த நிகழ்ச்சிக்குப் பதினைந்து தினங்களுக்குப்பின் பரதருடைய குணம் சூருவளிக்காற்று வேகத்தில் ஆயிரம் மடங்கு வளர்ந்து விட்டது.

தாய் வரய்வேண்ட, தந்தை யரசாட்சியைத் தர, அந்த மாபெரும் பதவியைத் துகளாக எண்ணித் துறந்து, அழுத கண்ணும் தொழுத கையுமாகப் பரதர் கானகம் போனுர். வழியில் இராம பக்தன் குகன் சந்திக்கின்றுன். பரதருடைய துறவுக்கோலத்தையும் தியாக சீலத்தையுங்காண்கின்றுன்.

சிறிய பதவிகட்குப் பஞ்சுபடாதபாடு படுகின்றுர்கள் பலர். பெரிய பதவியைக் கற்தல் உடையைப்போல் தூக்கி எறிந்து வரும் பரதருடைய பரம கல்யாண குண நலனை நோக்கி விம்மிதம் அடைகின்றுன் குகன். அவனுக்குக் கண்களையே நம்பமுடியவில்லை. கண்களை அகல மலர்த்திப் பலமுறை பார்க்கின்றுன். அடங்காத ஆச்சரியம். அவன் வாக்கிலிருந்து அப்போது புறப்பட்ட அருமை லாக்கியம் இது.

தாயுரை கொண்டு தாதை உதவிய தரணிதன்னைத்
தீவினை என்ன நீக்கிச் சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து புகழினேய் தன்மை கண்டால்
ஆயிரம் ராமர் நின்கேழ் ஆவரோ தெரியிலம்மா.

எனவே தியாக சீலத்தால் பரதர் இராமரைப் பார்க்கிலும் ஆயிரம் மடங்கு குணநலத்தால் வளர்ந்துவிட்டார். அம்மட்டோடு அவர் அமைந்துவிடவில்லை.

பெரும் பணக்காரர்கள் இருக்கின்ற பணம் போதும் என்று சும்மா இருக்கின்றுர்களா ? மேலும் மேலும் நல்வழியிலும் அல்வழியிலும் பணத்தினை இரவு பகலாக ஈட்டிக்கொண்டே யிருக்கின்றுர்கள்.

அதுபோல் பரதர் மேலும் மேலும் நற்குணங்களை வளர்த்துக் கொண்டே யிருக்கின்றுர்.

நந்திக் கிராமத்தில் பாதுகைக்குப் பட்டாபிஷேகம் புரிந்து, பாதுகையை வழிபட்டுக் கொண்டு பதினுன்கு ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தார்.

இந்திரியங்களை அவித்தார். இரவுபகல் ஒழியாது அவருடைய கண்களில் நீர் பெருகியது. இராமரை உன்னுந்தொறும் உன்னுந் தொறும் உள்ளம் உருகியது, நோக்கில் தென் திசையல்லது வேறு திசை நோக்காது வெறுந்தரையில் படுத்து, துன்பத்தை ஒரு வடிவ மாக எழுதிவைத்ததுபோல் இருந்தார் பரதர்.

இராமர் காடு சென்றது மாசி மாதம் சுக்லபட்சத்துப் பஞ்சமி. 14 ஆண்டுகள் கழிந்தன. குறிப்பிட்ட நாளில் இராமர் வரவில்லை. பரதர் தீ மூட்டினார். அதில் வீழ்ந்து இறந்துபோகத் துணிந்தார். நெருப்பு விண்ணளவும் கொழுந்துவிட்டு எரிகின்றது. பயங்கரமான அந்த நெருப்புக் குண்டத்தைப் பரதர் வலமாக வருகின்றார்.

இதனையறிந்த கௌசலா தேவி ஓடோடி வந்தாள். ''மகனே! பரதா! உன் உயிர் பிரிந்தால் உலகத்தில் தருமமே யிருக்காது. இன்று வரவில்லையாயின் இராமன் நாளை வருவான். நீ அவசரப் பட்டு உயிரை விடாதே'' என்று கூறினாள். அப்போது, கோசலை கூறுகின்றாள். முன் மூன்றுமடங்கு குணத்தால் உயர்ந்தவன் பரதன் என்று கூறிய அவள் இப்போது கோடி கோடி மடங்கு பரதர் உயர்ந் தவர் என்று கூறுகின்றான்.

எண்ணில் கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின்னரு ளுக்கரு காவரோ
புண்ணி யம்எனும் நின்னுயிர் போயினால்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ?

எண்ண முடியாத கோடிக்கணக்கில் குணநலங்களில் உயர்ந்து விட்டார் பரதர்.

இவ்வாறு ஒவ்வொரு மனிதனும் தத்தம் குணங்களை வளர்க்க வேண்டும். பணத்தை வளர்க்கின்றார்களே யன்றி குணத்தை வளர்க் கின்றார்களில்லை.

ஒரு பெரியவர் தன் நண்பருடைய இல்லத்துக்குச் சென்றார். பெரியவரை அந்த இல்லத்தில் உள்ள எல்லோரும் வணங்கினார்கள். அங்கு ஐந்து வயது சிறுவன் ஒருவன் நின்று கொண்டிருந்தான்.

''இவன் பெயர் யாது?'' என்று பெரியவர் கேட்டார் நண்பர். இவன் என் மகன்தான்- இவன் பேர் மலையப்பன் என்றார்.

பெரியவர், ''தம்பி! நீ பள்ளிக்கூடம் போகின்றாயா? ஏதாவது படி பார்ப்போம்'' என்றார்.

மலையப்பன் அரிச்சுவடி எடுத்து மழலை மொழியால் ''அ...ரி'' ''ஆ...லை'! ''ஆ...டு'' ''டா...ப்...பி'' ''மா...டு/' ''எ...லி'' ''ஏ...ணி'' என்று எழுத்துக்களைக் கூட்டிப் படித்தான்.

பெரியவர் "பேஷ். நன்ருகப் படிக்கின்ருய். இந்தா பண்டம் வாங்கிச் சாப்பிடு" என்று ஒரு ரூபாய் பரிசு தந்தார்.

பெரியவர் 12 வருடங்கட்குப் பின் அந்த வீட்டுக்குச் சென்ருர். முன்போல் எல்லோரும் அவரை வீழ்ந்து வணங்கினர்கள். மலையப்பனும் வணங்கி நின்ருன். அவனுக்கு இப்போது வயது 17.

பெரியவர் மலையப்பனை அன்புடன் பார்த்து "அப்பா! மலையப்பா! நீ நன்கு படிக்கின்ருயா? ஏதாவது படி" என்ருர்.

மலையப்பன் ஓடி தன் புத்தகத்தைக் கொணர்ந்து படிக்கத் தொடங்கினன்.

"அ...ரி" "ஆ...லை" ஆ...டு" "ட...ப்...பி" "மா...டு" "எ...லி" "ஏ...ணி" என்று எழுத்தைக் கூட்டித் தடுமாறிக்கொண்டு படித்தான்.

இதைக்கேட்ட பெரியவர் பேஷ் என்று கூறுவர்? அவன் அசட்டுத் தன்மையைப் பார்த்துச் சிரித்தார். "அட அறியாமைப் பிண்டமே! மக்கு மகிஷமே! பன்னிரு ஆண்டுகட்குமுன் படித்தது போலவே எழுத்தைக்கூட்டிப் படிக்கின்றனையே? உனக்கு இப்போது வயது பதினேழு ஆயிற்றே? உன் கல்வியில் ஒரு அங்குலம்கூட முன்னேறவில்லையே? இந்த நல்ல குடும்பத்தில் நீ ஏன் பிறந்தாய்? உன்னுல் இந்தக் குடும்பம் முன்னேறுமா? நீ பிறவாமல் இருந்தாலே நன்ருக இருக்குமே?" என்று எண்ணிச் சிரித்தார்.

இதுபோல் நாம் பன்னிரு ஆண்டுகட்கு அல்லது 25 ஆண்டுகட்குமுன் இருந்ததுபோல்—வாழ்ந்ததுபோல்—எழுந்ததும் காப்பி குடிப்பதும் செய்தித்தாள் படிப்பதும், சீட்டு விளையாடுவதும், வீண் வார்த்தை பேசுவதுமாக இருந்தால், இறைவனை நோக்கி ஜெபம், தவம், தியானம், பாராயணம் முதலிய ஆத்மசாதனைகள் செய்யாமல் அன்று இருந்ததுபோலவே இன்றும் இருந்தால் மகான்கள் நம்மைக் கண்டு சிரிக்கின்ருர்கள். மனம் நொந்து, "அட அறிவிலிகளே! நீங்கள் ஏன் இந்தப் புண்ணிய பாரதபூமியில் பிறந்தீர்கள்?

தோன்றில் புகழொடு தோன்றுக தோன்ருக்கால்
தோன்றலில் தோன்ருமை நன்று.

நீங்கள் பிறவாமல் இருந்தால் நன்ருயிருந்திருக்குமே? முனிவர்களும், சித்தர்களும், பத்தர்களும், முத்தர்களும், சிவஞானிகளும். தவசிலர்களும் அவதரித்த புண்ணிய பூமியாயிற்றே இது. இத்தகு சந்தனத் தருக்கள் தோன்றும் இந்த ஞானபூமியில் நீங்கள் சப்பாத்திக் கள்ளி, கொடிக்கள்ளி. திருகு கள்ளிகளாக ஏன் முளைத்தீர்கள்? என்று நம்பொருட்டு வருந்திச் சிரிக்கின்ருர்கள்?

## சாந்தி பருவம்

(90-ஆம் பக்கத் தொடர்ச்சி

வீணையின் தந்தி சுரங்களை அனுசரிப்பதுபோல் அரசன் அறநெறிகளை அனுசரிக்கவேண்டும். மலை உறுதியாக நிற்பதுபோல் அறத்தில் உறுதியாக நிலைத்து நிற்கவேண்டும். அறிவுள்ளவன் பசுவைக் கறப்பதுபோல் ஒவ்வொரு நாளும் பூமியைக் கறக்கவேண்டும். வண்டு மலர்களை வருத்தாமல் தேனை எடுப்பதுபோல் குடிகளை வருத்தாமல் வரி வசூலிக்கவேண்டும். கருவூலத்திலிருந்து எடுக்காமலும், சிறிய பொருளையும் அலட்சியம் செய்யாமலும் அரசன் வாழவேண்டும். பொருளை வளர்ப்பதில் ஊக்கம், ஆற்றல், அடக்கம், அறிவு, உடம்பு, தைரியம், சௌரியம், காலம் இடம் அறிதல் என்ற இந்த எட்டுக் குணங்களுடன் விளங்கவேண்டும். நெய்யில் நனைந்து நெருப்பு வளர்வதுபோல்—ஒரு விதை பல விதைகளை உண்டு பண்ணுவதுபோல் சிறிய பொருளைப் பெரிய பொருளாக்கி அரசன் அரசு புரியவேண்டும்; ஆசையே பல கேடுகளுக்கும் மூலம். ஆதலால் அரசன் ஆசையுள்ளவனைப் பணியாளனாகச் சேர்த்துக் கொள்ளக் கூடாது.

தருமத்தை நன்கு வெளியிடுவதுதான் தண்டம்—தண்டத்துக்கு* வ்யவஹாரம் என்றும் பேருண்டு. இவ்வுலகில் தண்டம் இல்லாவிட்டால் ஒருவரோடொருவர் அடித்துக் கொள்வார்கள். தண்டத்தின் அச்சத்தாலேயே ஒருவரையொருவர் அடியாமல் இருக்கின்றார்கள். அரசன் தாயானாலும் தந்தையானாலும் உடன்பிறந்தவனானாலும் மனைவியானாலும் குருவானாலும் தவறு கண்டபோது தண்டிக்கவேண்டும்.

தருமநந்தனா! ஆதிகாலத்தில் மகாதேவராகிய சிவமூர்த்தி நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள், நியாயம் மீமாம்ஸை, தருமசாத்திரம் புராணம் என்ற பதினான்கு வித்தைகளையும், தநுர்வேதம் ஆயுர்வேதம் காந்தர்வ வேதம் அர்த்த வேதம் ஏனைய கலைகளையும் கூறியருளினார். ஆதலால் நீ அரச தருமத்தை மேற்கொள்ளக் கடவாய்'' என்றார்.

தருமர் ''பிதாமகரே! அறம்பொருள் இன்பம் என்ற உறுதிப் பொருள்களை உரைத்தருளும்'' என்றார். அறத்தினால் பொருளும், பொருளினால் இன்பத்தையும் பெறவேண்டும். இம்மூன்றையும் விட்டது வீடு ஆகும். அறம் பயனை விரும்பாமல் செய்யவேண்டும். பொருளால் அறஞ்செய்யாமல் இருப்பது பாவமாகும். அறத்துக்குப் பொருளும், பொருளுக்கு அறமும் ஒன்றுக்கு ஒன்று காரண

*வ்யவஹாரம்-திருடு முதலியவற்றை விலக்குவது. வி-இல்லை. அவஹார-கெட்ட வழியில் பிறர் பொருளைத் திருடுவது.

மாகும். வனத்தால் விலங்கு வாழும். விலங்கினால் வனம் வாழும், அறநெறியன்றி நுகரும் இன்பம் இன்பமாகாது.

சீலம்

தருமர் "சிறந்தவரே! சீலம் என்பது பற்றி அறிய விரும்புகின்றேன். அது எத்தன்மையானது? அதையடையும் வழி யாது? எனக்கு அதை உபதேசிக்கவேண்டும்" என்று கேட்டார்.

பிதாமகர், "இது பரமரகசியமானது. கேட்கத்தக்கது. கூறுகின்றேன் கேள். இராஜசூயத்தில் உன் செல்வத்தைக் கண்டு அழுக்காறு கொண்ட துரியோதனன் பெருந்துயரத்தை யடைந்தான். திருதராட்டிரன் "அருமை மகனே! உன் துயரத்துக்குக் காரணம் என்ன? பெரிய செல்வமும், உயர்ந்த உணவுகளும், நல்ல பணியாள்களும் ஆடையாபரணங்களும் உனக்கு நிரம்பியிருக்கின்றன. இத்தனையிருந்தும் நீ ஏன் துயரப்படுகின்றாய்? என்று கேட்டான்.

துரியோதனன், 'பிதாவே! தருமனுடைய அரண்மனையில் தங்கப் பாத்திரத்தில் பதினாயிரம் பேர்கள் உணவு செய்கின்றார்கள். இந்திரனுக்கும் இல்லாத பெருஞ் செல்வத்துடன் பாண்டவர்கள் இன்பவெள்ளத்தில் திளைக்கின்றார்கள். அதைக்கண்டு என் மனம் துயரத்தில் துள்ளித் துடிக்கின்றது" என்றான்.

திருதராட்டிரன், "மகனே! நீ சீலமுள்ளவனாயிரு. சீலத்தால் மூன்று உலகங்களையும் அடையலாம். மாந்தாதா ஒரேயிரவிலும் *ஜனமேஜயர் மூன்று நாளிலும், நாபாகர் ஏழு நாள்களிலும் பூமியையடைந்தார். இவர்கள் சீலத்தால் செல்வமும் சிறந்த புகழும் அடைந்தார்கள். சீலம் என்பது மனவாக்குக்காயங்களால் உயிர்களுக்கு நன்மை செய்தல், கருணை தானம் இந்த மூன்றும் சேர்ந்த ஒரு பெருங்குணம் என்று உணர். இதைப்பற்றி முன் நடந்த ஒரு இனிய கதையைக் கூறுகின்றேன் கேள்.

பிரகலாதன் நாரதர் மூலம் சீலத்தையடையும் வழியை அறிந்து, சீலத்தைக் கடைப்பிடித்து, இந்திரவுலகம் முதல் மூன்றுவுலகங்களையும் அடைந்தார்.

இந்திரன் அதனால் துயரமுற்றான். வியாழ பகவானையடைந்து உயர்வை யடையும் வழியை உபதேசிக்குமாறு கேட்டான். வியாழ பகவான் அவனுக்கு அதை உபதேசித்து "தேவர் கோமானே! இன்னும் இதைப்பற்றிச் சிறந்த கருத்துக்களை நன்கு உணர்ந்தவர் சுக்கிராச்சாரியர். நீ அவரிடம் போய்த் தெரிந்துகொள்" என்றார். இந்திரன் வெள்ளி பகவானிடம் போய் உயர்வு அடையும் வழியை வினவினான் அவர் அதை அவனுக்கு உபதேசித்தார். "இந்திரனே! இன்னும் இதைவிட மேலான இரகசியம் பிரகலாதரிடம் இருக்கின்றது. அவரிடம் போய் அறிந்துகொள்" என்றார்.

இந்திரன் அந்தண வடிவுடன் பிரகலாதரிடம் போய் உயர்வு அடையும் வழியை உபதேசிக்குமாறு கேட்டான். பிரகலாதர்

---

*இவர் வேறு.

"அந்தணரே! மூவுலகங்களையும் அரசுபுரியும் எனக்கு அநிக அலு வல்கள். இப்போது உனக்கு உபதேசிக்க நேரம் இல்லை" என்றார். அந்தணனாகிய இந்திரன் "உமக்கு ஓய்வு கிடைக்கும்போது உபதேசி யும்" என்று கூறி அவருக்குப் பணிவிடைகள் புரிந்து கொண்டிருந் தான்.

ஒருநாள் பிராம்மணனுடைய அன்புக்கும் பணிவிடைக்கும் மகிழ்ச்சியடைந்த பிரகலாதர் "உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். பிராம்மணன் "அசுரகுல வித்தகரே! உம்மிட முள்ள சீலத்தை எனக்கு வழங்குவீராக" என்று கேட்டான். பிரக லாதர் திடுக்கிட்டு, தந்த வாக்கை நிறைவேற்றும் பொருட்டு, நீர் கேட்டதைத் தந்தேன்" என்றார். அந்தணன் மறைந்துவிட்டான். பிரகலாதர் இவன் நம்மை வஞ்சிக்க வந்தவன் போலும் என்று எண்ணித் துயரமுற்றார்.

பிரகலாதருடைய திருமேனியிலிருந்து ஒரு ஒளிமயமான சிறந்த உருவம் வெளிப்பட்டது. "நீ யார்?" என்று பிரகலாதர் கேட்டார். "நான் சீலம். உன்னால் விடப்பட்டுச் செல்லுகின்றேன்" உன்னிடம் ஏவல்புரிந்து கொண்டிருந்த அந்த அந்தணனிடம் வசிக்கப் போகின் றேன்" என்று கூறி மறைந்து இந்திரனை யடைந்தது.

தருமம்

பிரகலாதருடைய திருமேனியிலிருந்து மறுபடியும் அதே உருவம் படைத்த ஒளியுருவம் வெளிப்பட்டது. "நீ யார்?" என்று பிரக லாதர் கேட்டார். "உத்தமனே! நான் தருமம். சீலம் எங்கிருக் கின்றதோ அங்குதான் நான் இருப்பவன். ஆதலால் சீலம் என்ற அது சென்ற இடத்துக்கு நான் போகின்றேன்" என்று கூறிச் சென்று விட்டது.

ஒழுக்கம்

பிரகலாதருடைய திருமேனியிலிருந்து மீண்டும் அதுபோன்ற ஒரு ஒளியுருவம் வெளிப்பட்டது. "நீ யார்?" என்று பிரகலாதர் கேட் டார். "என்னை ஒழுக்கம் என்று கூறுவார்கள். நான் தருமமுள்ள இடத்தில் இருப்பேன்" என்று கூறி தருமத்தைத் தொடர்ந்து சென்றது.

பலம்

மீளவும் பிரகலாதருடைய உடம்பிலிருந்து பெரிய ஒளியுடன் ஒளியுருவம் வெளிப்பட்டது. பிரகலாதர் "நீ யார்?" என்று கேட் டார். "நான் பலம். ஒழுக்கமுள்ள இடத்தில் நான் இருப்பேன்" என்று கூறிவிட்டு மறைந்துவிட்டது.

இலட்சுமி

பிரகலாதருடைய திருமேனியிலிருந்து ஒரு தெய்வத்திருமடந்தை வெளிப்பட்டாள். "நீ யார்?" என்று பிரகலாதர் கேட்டார்,

''அப்பா! பிரகலாதா! நான் மகாலட்சுமி. நான் உன்னிடம் சுகமாக வாசஞ் செய்தேன். நான் எப்போதும் பலம் என்ற ஒன்றை அனுசரிப்பவள். உன்னிடமிருந்து பலம் நீங்கியது. அதனால் நானும் நீங்குகின்றேன்'' என்றாள்.

பிரகலாதர் ''தாமரைச் செல்வியே! சத்திய விரதையே! நீ எங்கு செல்லுகின்றாய் :

'நான் அந்தப் பிராம்மணனிடத்தில் செல்லுகின்றேன்''

''அந்தப் பிராம்மணன் யார்?''

''அவன் இந்திரன். அவன் பிரம்மசாரிப் பிராம்மணனாக உன்னிடம் ஏவல் புரிந்தான். நீ சீலத்தால் மூன்று உலகங்களையும் அடைந்தாய். இந்திரன் உன்பால் சீலத்தை யாசித்துப் பெற்றான். சீலத்தை நீ அவனுக்குத் தந்தனை. அதனால் சீலம் உன்னிடமிருந்து சென்றது. அதனைத் தொடர்ந்து முறையே தருமம் சத்தியம் ஒழுக்கம் பலம் என்ற இவைகள் உன்னைவிட்டுச் சென்றன. கடைசியாக நானும் போகின்றேன்'' என்று கூறி மறைந்துவிட்டாள்.

ஆதலால், '' துரியோதனா! சீலம் உள்ள இடத்தில் எல்லாம் இருக்கும்'' என்று கூறினான்.

## ஆசையை விடவேண்டும்

தருமர் ''பிதாமகரே! அமுதம் போன்ற உமது அறவுரையைக் கேட்ட எனக்கு ஆர்வம் அடங்கவில்லை. மேலும் மேலும், கேட்க வேண்டும் என்ற ஆர்வம் மேலிடுகின்றது. ஆசையால்தானே துரியோதனன் ஐந்துவீடு கூட தர மறுத்து பதினொரு அட்சரோணி சேனைகளுடன் அழிந்தான். ஆசைக்கு அதிக வலிமையுளது என்று எண்ணுகின்றேன். ஆசையை விட வழி யாது ?'' என்று கேட்டார்.

பீஷ்மர் ''ஆசைக்கு அளவேயில்லை. எத்தனை கட்டைகளையிட்டாலும் நெருப்புக்குப் போதும் என்ற எண்ணம் ஏற்படுவதில்லை'' எத்தனை செல்வம் பெற்றாலும் போதும் என்ற அமைதி மனிதனுக்கு ஏற்படுவதில்லை. அறிவு என்ற ஒன்றினால்தான் ஆசையை அடக்க வேண்டும்.

சுமித்திரன் என்ற மன்னன் வேட்டையாடி மிகவும் களைத்துக் காட்டில் ஓய்ந்து அமர்ந்தான். அங்கே இடபர் என்ற மாமுனிவர் அவனுக்கு ஆசையை அடக்கும் வழியை இனிது உபதேசித்தார்.

எனவே அரசரிற் சிறந்தவனே! நீ ஆன்றோர்களையும் தெய்வத்தையும் வழிபட்டுக்கொண்டு செம்மையான நெறியில் நின்று மும்மை நலன்களையும் அடைவாயாக'' என்று பீஷ்மர் உபதேசித்தார்.

அரச தருமம் முற்றிற்று.

(தொடரும்)

## சந்தா நேயர்களுக்கு முக்கிய அறிவிப்பு

அச்சுக்கூலி ஏற்றத்தாலும், அச்சுத்தாள் விலையேற்றத்தாலும் ஏற்படும் அதிகச் செலவை ஓரளவு இதுகாறும் சமாளித்து வருகின்றோம் இதற்கிடையே மத்திய அரசினர் சிறிய பத்திரிகைகளுக்கான தபாற்கட்டணத்தை ஒன்றுக்கு இரண்டரைப் பங்காக உயர்த்தி விட்டனர். மற்ற தபாற் கட்டணங்களையும் கூட்டிவிட்டனர். ஆக இவ்வாறு இதுபொழுது ஏற்பட்டுள்ள அதிகச்செலவுகளைச் சமாளிக்க ஆண்டுச் சந்தாத் தொகையை மேலும் கூட்டவேண்டிய நெருக்கடி ஏற்பட்டுள்ளது. எனவே அன்பர்கள் அடியிற் குறிப்பிட்டுள்ள ஆண்டுச் சந்தாத் தொகைக்கும் தாங்கள் அனுப்பியுள்ள தொகைக்குமுள்ள குறைத்தொகையை விரைவில் அனுப்பிவைக்க வேண்டுகின்றோம்.

**கீலக ஆண்டு முதல் ஆண்டுச் சந்தா**

| | | | |
|---|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ. | 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. | 5-50 |

மானேஜர், திருப்புகழமிர்தம்
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2,

---



---

## அன்பர்கள் கவனத்துக்கு

நமது காரியாலயத்துக்கோ, ஆசிரியருக்கோ எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலை விரும்புவோர் பதிலுக்காக கார்டோ, தபால் தலைகளோ அனுப்பினுலொழிய பதிலனுப்ப வசதிப்படாது.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

போன் : 8 3 8 3 9
திருப்புகழமிர்தம் Regd. No. M. 3487



Registered with the Registrar of Newspapers for India under R. N. 1109/57.

Edited by Sri KIRUPANANDAVARI & Published by M. Madusoodana Sivam, 89, Singanna Chetty Street, Madras-2. Printed by K. M. John at Jeevan Press, 8, Titarappa Mudali Street, Triplicane, Madras-5.